# இரட்சணிய யாத்திரிகம்





ஆசியவியல் நிறுவனம்

சென்னை-600 119

# இரட்சணிய யாத்திரிகம்

H. A. கிருஷ்ண பிள்ளை

பொதுப் பதிப்பாசிரியர்

ஜி. ஜான் சாமுவேல்

பதிப்பாசிரியர்

மா. மதியழகன்




ஆசியவியல் நிறுவனம்

சென்னை–600 119

Iraṭcaṇiya Yāttirikam

by H.A. Kiruṣṇa Piḷḷai



Reprint - September, 1998, xxxvii + 586

Publication No. 59

Price: Rs. 450/- US $ 50

இந்நூல் தமிழ் நாடு அரசு-தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறையின், அரிய நூல் வெளியீட்டுத் திட்ட நிதி உதவி பெற்று வெளியிடப்பெறுகிறது.

**Copies can be had from**

Publications Division
Institute of Asian Studies
Chemmancherry
Chennai - 600 119
India.

| | |
|---|---|
| Phone (Office) | 4961662, 4960831 |
| (Residence) | 4960085 |
| Fax | 91-44-4960959 |
| Email | ias@xlweb.com |
| World Wide Web Site | http://xlweb.com/heritage/asian |

Composed by the INSTITUTE OF ASIAN STUDIES, Chennai - 600 119.
Printed by Students offset Services , Chennai.

# உள்ளடக்கம்

# பதிப்புரை

ஒரு நூற்றாண்டு காலமாகத் தமிழ்க் கிருஸ்தவர்களால் மட்டுமல்லாது, சமயம் கடந்த நிலையில், தமிழ் இலக்கிய அறிஞர்களாலும், ஆர்வலர்களாலும் பெரிதும் மதிக்கப்பட்டுவரும் கவித்துவ ஆற்றல் மிக்கவராக விளங்கி வருபவர் H. A. கிருஷ்ண பிள்ளை (1827-1900) "அருட்கவிஞர், இரக்ஷணியக் கவிஞர், கவியரசர், காப்பியப் பெரும் புலவர், கிருஸ்தவக் கம்பன், திருமறைக் கவியரசர், நற்செய்திப் பாவேந்தர், மகரிஷி, மகாகவி, மகாவித்துவான், மீட்புக் கவிஞர்" என அவரைக் குறித்து வழங்கிவரும் பத்திற்கும் மேற்பட்ட விருதுகளே, தமிழ் இலக்கிய உலகில், அவர் எந்த அளவிற்குப் போற்றப்பட்டு வருகின்றார் என்பதற்குச் சான்றுகளாகும். அன்னாரது **இரக்ஷணிய யாத்திரிகம்**, அவர் வாழ்ந்த காலத்திலேயே 1894இல், சென்னை கிருஸ்தவ இலக்கிய சங்கத்தின் முதல் தமிழ் வெளியீடாக வெளியிடப்பட்டது. பின் மறுபதிப்பைக் கொண்டுவர முற்பட்ட கிருஸ்தவ இலக்கிய சங்கம், நூலை இரு தொகுதிகளாகப் பகுத்து, முதல் தொகுதியை 1927இலும் இரண்டாம் தொகுதியை 1931இலுமாக வெளியிட்டது. அச்சங்கம் மீண்டும் முதல் தொகுதியை 1958இல் மறுபதிப்பு செய்துள்ளது. இரண்டாம் தொகுதி மறுபதிப்பு செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. கிருஸ்தவ இலக்கிய சங்கத்தின் இரண்டாம் பதிப்பில், முதற் பருவம் முழுவதும், இரண்டாம் பருவத்தில் முதல் இரண்டு படலங்களும் உரையுடன் வெளியிடப்பட்டுள்ளன. ஏனைய பகுதிகளுக்கு உரை எழுதப்படவில்லை.

**இரக்ஷணிய யாத்திரிகத்தின்** படலங்கள் சில தனியே உரையுடன் வெளியிடப்பட்டுள்ளன. இவ்வகையில் பி.எஸ். கடம்பவன சுந்தர நாயனார் என்பவர் எழுதிய உரையுடன் *குமார பருவத்தில்* வரும் *இரக்ஷணிய சரிதப் படலம்* என்ற படலம், கிருஸ்தவ இலக்கிய சங்கத்தால் 1953இல் வெளியிடப்பட்டுள்ளது. இதே போன்று *இரக்ஷணிய சரிதப் படலத்தில்* இடம் பெற்றுள்ள 50 பாடல்களைக் கொண்ட *சிலுவைப்பாடு* என்னும் பகுதி மட்டும் வீ.ப.கா. சுந்தரம் அவர்களின் விரிவுரையுடன், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தால் 1972 இல் வெளியிடப்பட்டுள்ளது. இதே ஆண்டில் இராமநாதபுர அத்தியட்சாதீனம், *நிதான பருவத்தில்* வரும் *இரக்ஷணிய நவநீதப் படலத்தை*, மதுரை வீ ப. நடராசன் என்பவரது உரையுடன் வெளியிட்டுள்ளது. 1977இல் கிருஷ்ண பிள்ளையின் 150வது ஆண்டு நினைவாக, கிருஸ்தவ இலக்கிய சங்கம், பென்னு ஆ. சத்தியசாட்சி அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்டு, 876 பாடல்களை மட்டும் கொண்ட,

**இரக்ஷணிய யத்திரிகத்தின்** சுருக்கமான பதிப்பு ஒன்றைக் கொண்டு வந்துள்ளது இப்பதிப்பில் செய்யுட்கள் சந்தி பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன அடிக்குறிப்பாக, அரும்பத உரை தரப்பட்டுள்ளது மேலும் நூலின் பொருள் போக்கை உணர்த்தும் வகையில், செய்யுட்களின் மேல், தலைக்குறிப்புகள் தரப்பட்டுள்ளன இந்தச் சுருக்கப் பதிப்பானது பொது வாசிப்புக்குப் பயன்படும் வகையில் எளிமைபடுத்தப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

**இரக்ஷணிய யாத்திரிகப்** பதிப்பு வரலாற்றில், அதன் முதற் பதிப்பிற்குப் பிறகு-ஒரு நூற்றாண்டைக் கடந்த பிறகும் கூட-முழுமையான மறுபதிப்பொன்று இது காலவரை வெளிவரவே இல்லை.

சீர்திருத்தத் திருச்சபையைச் சார்ந்தத் தமிழ்க் கிருஸ்தவர்களின் பெருங்காப்பியமாகவும் **திருக்குறள், தேவாரம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம், கம்பராமாயணம், தாயுமானவர் பாடல்கள்** முதலிய உன்னதமானத் தமிழ் இலக்கியப் படைப்பு நெறிகளின் சங்கமமாகவும் விளங்கும் இந்நூல் இன்று கிடைத்தற்கரிய நூற்பட்டியலில் இடம்பெற்றிருப்பது விரும்பத்தக்க நிலையன்று.

ஆசியவியல் நிறுவனம் உன்னதமானத் தமிழ் இலக்கியப் படைப்புகளை எல்லாம் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து, உலகறியச் செய்வதன் மூலம், தமிழின் உயர்தனிச் செம்மையை நிலைநாட்டும் முயற்சியில் ஈடுபட்டு வருகிறது. அம்முயற்சியின் ஒரு பகுதியாக, **இரக்ஷணிய யாத்திரிகத்தை** ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பணியும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. நிறுவனம் **இரக்ஷணிய யாத்திரிகத்தை** மொழிபெயர்க்க முற்பட்டபோது, இந்நூல் இன்று கிடைத்தற் ரியதாக இருக்கிறது என்பது தெரியவந்தது எனவே **இரக்ஷணிய யாத்திரிக** மொழிபெயர்ப்புத் திட்டத்தின் துணைச் செயலாக, நூல் முழுவதையும் ஒரே தொகுதியாக வெளிக்கொணர வேண்டியது காலத்தின் தேவை என நிறுவனம் முடிவு செய்தது அம்முடிவின்படி இப்போது **இரக்ஷணிய யாத்திரிகத்தின்** மூலம் முழுவதும் மறுபதிப்பு செய்யப்படுகிறது.

இப்பதிப்பிற்கு, 1894இல் வெளியான முதற் பதிப்பு - அதிலும் ஆசிரியர் பயன்படுத்திய பிரதியே - ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளது. முதற் பதிப்பில், *குமார பருவத்தில்* வரும் *விசிராந்திப் படலம்* 11 பாடல்களை மட்டும் கொண்டிருக்கும். ஆனால் ஆசிரியரோ தம் பிரதியில் இப்படலத்தை அடுத்து வரும் *காட்சிப் படலத்* திலிருந்து 12 பாடல்களை எடுத்து, *விசிராந்திப் படலத்துடன்* சேர்த்து, அதை 23 பாடல்களைக் கொண்டதாக மாற்றிய மைத்துள்ளார். அத்திருத்தம் இப்பதிப்பில் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. இதே போன்று முதற் பதிப்பில், நூலின் இறுதியில் காட்டப்பட்டுள்ள பிழை திருத்தங்களும் இப்பதிப்பில் ஏற்று, நிவர்த்தி செய்யப்பட்டுள்ளன. சந்தப் பாக்களால் ஆன இந்நூலின் ஓசை

நயம் கெடாமல் இருக்க வேண்டும் என்பதற்காக, முதற் பதிப்பைப் போல் இப்பதிப்பிலும் செய்யுட்கள் சந்தி பிரிக்கப்படாமலேயே கொடுக்கப்பட்டுள்ளன. இப்பதிப்பில் கிருஸ்தவத் தமிழ்க் கவிதைகளின் தோற்றம் பற்றிய வரலாற்றுச் செய்திகள் முன்னுரையாக, ஆங்கிலத்திலும் தமிழிலும் தரப்பட்டுள்ளன. முதற் பதிப்பில் செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை தரப்படவில்லை இப்பதிப்பில் அது கொடுக்கப்பட்டுள்ளது முதற் பதிப்பில் இடம்பெற்றுள்ள 'சில கவிகளுக்கு அர்த்தம்' 'அரும்பத அகராதி' என்ற பகுதிகள், அப்படியே இப்பதிப்பிலும் சேர்க்கப்பட்டுள்ளன. கவியரசர் கிருஷ்ண பிள்ளையினுடைய நூற்களின் பதிப்பு விவரமும், **இரக்ஷணிய யாத்திரிகம்** பற்றியும், ஆசிரியரின் வாழ்வும் தொண்டும் பற்றியும் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதப்பட்டுள்ள நூற்களும் கட்டுரைகளும் நூலடைவாகத் தரப்பட்டுள்ளன மொத்தத்தில் ஆசிரியரே வடிவமைத்த நூலின் அடிப்படை அமைப்பில் எந்த மாறுதலையும் செய்யாமல், காலத்தின் தேவைக்கேற்ப சில இணைப்புகளைக் கொண்டதாக இப்பதிப்பு அமைகிறது.

ஆசிரியர் வடமொழிச் சொற்களைத் தற்சமமாகவும் தற்பவமாகவும் சரளமாகப் பயன்படுத்துவதை ஒரு நடையியலாகவே கையாண்டுள்ளார். வடமொழி ஒலிப்புக்கு 'ஜ', 'க்ஷ' முதலிய கிரந்த எழுத்துக்களையும் மிகுதியாகவே கையாண்டுள்ளார் நூலின் தலைப்பையே அவர், *இரக்ஷணிய யாத்திரிகம்* என்று, 'க்ஷ' எழுத்தைக் கொண்டுதான் அமைத்துள்ளார். ஆனால் பிற்காலத்தில் தனித் தமிழ் உணர்வு காரணமாக, 'க்ஷ' வுக்கு பதில் 'ட்ச' என்ற தமிழ் எழுத்துக்களைக் கூட்டெழுத்தாகப் பெய்து, *இரட்சணிய யாத்திரிகம்* என்று அழைக்கும் வழக்கமே பெருகியுள்ளதை அறியமுடிகின்றது. எனவே இப்பதிப்பில், இவ்விரு மரபுகளையும் பதிவு செய்யும் வகையில், நூலின் முகப்பில் *இரட்சணிய* என்ற வடிவமும் நூலினுள் அனைத்து இடங்களிலும் *இரக்ஷணிய* என்ற வடிவமும் கையாளப்பட்டுள்ளன.

கிடைத்தற்கரியதாக இருக்கும் **இரக்ஷணிய யாத்திரிக** முதற் பதிப்புப் படியை-அதிலும் ஆசிரியரின் கைப்பிரதியைத்-தந்துதவிய முனைவர் வீ. ஞானசிகாமணி அவர்களுக்கும், இன்னொரு படியைக் கொடுத்த முனைவர் மோசஸ் மைக்கேல் பாரடே அவர்களுக்கும் முதற்கண் நன்றி கூறல் வேண்டும் இப்பதிப்பின் மெய்ப்புப் பணியில் உதவி புரிந்தப் பேராசிரியர் சி சுப்பிரமணியன் அவர்களுக்கும் நன்றி. தொட்டால் உடைந்துவிழும் நிலையில் இருக்கும் முதற் பதிப்புப் புத்தகத்திலிருந்து மிகவும் கவனமாகக் கணிப்பொறியின் வாயிலாக ஏடு பெயர்த்துக் கொடுத்ததோடு, இப்பதிப்பின் நூல் வடிவமைப்பையும் செய்த திரு. க. செல்லதுரையின் பணி பாராட்டத்தக்கதாகும். அட்டைப்பட ஓவியர் திரு அ செ. நடராசன் அவர்களுக்கும், மாணவர் மறுதோன்றி அச்சகத்தாருக்கும் நன்றி உரியதாகும்.

# INTRODUCTION

## The Evolution of Tamil Christian Poetry

The European scholars were largely responsible for heralding the renaissance in later Tamil devotional literature. Apart from their manifold contributions to other fields of Tamilology, they have composed devotional Christian poems in Tamil which stimulated interest among the native poets too. An apparently conflicting environment thus ensued contributed to the growth of multifarious devotional poems in Tamil. The contribution of European scholars to Tamil devotional poetry is not very significant when we look into the nature of the poems composed by them. Yet, it is historically significant in so far as it marks the beginning of the emergence of Tamil Christian hymns and lyrics with native spirit and temper.

Among the European Tamil poets, the names of the missionaries such as Robert de Nobili, Beschi, Ziegenbalg, Ellis, Rhenius, G.U. Pope and Robert Caldwell are worth-mentioning. It is said that Robert de Nobili (1577-1656) has composed three poetical works in Tamil, namely **Namatu Kaṭavuḷiṉ Tuyaraṅkaḷ** (On the Suffering of our Lord), **Uṉmaiyāṉa Camayam** (Apology of the True Religion) and **Nittiya Vāḻvu** (Eternal Life). Apart from these, he has composed a number of Christian hymns in Tamil which are not available to us. Charles E. Gover says, "Robert de Nobili had set an example many years before in poems which were then highly esteemed" (quoted in K. Meenakshisundaram, 1974: 317).

The untiring efforts by missionaries like Ziegenbalg (1682-1719) to translate into Tamil the German hymns, used in liturgies, are worth-mentioning. In 1713, Ziegenbalg compiled the **Book of Hymns Set to Malabaric Music** which was greatly responsible for the growth of native Christian lyrics (Ibid. 318). Christian faith began to find indigenous expression in this work. It is supposed to be the first work of its kind printed in Tamil. It had a collection of 48 verses. Ziegenbalg is also said to be the first to introduce singing in the Tamil Church. His translation of 48 hymns appeared in print in 1713, and this was soon enlarged by his successors to 307 hymns. Ziegenbalg was followed by his successors such as B. Schultze, C.F. Pressier and T. Walker who have made significant contributions to Tamil Christian literature.

Ziegenbalg's meritorious achievements had a considerable response among the native congregation, and this enthused other missionaries to venture on composing more hymns in Tamil. E. Webb of the American Mission, recognizing the desirability of adapting the hymns to Indian metres in public worship, edited **Kirustavak Kīrttaṉaikaḷ** (Christian Lyrics) in 1859 and had it published through the Christian Vernacular Education Society for India. Following this, books like **Tiruccapaik Kīrttaṉaikaḷ** (Church Lyrics), **Ṭōṉāvūr Tamiḻk Kīrttaṉaikaḷ** (Donnavur Tamil Lyrics), **Pukaḻmālai** and others came to be printed.

A pioneering European scholar, Ellis had also composed a few poems in Tamil on Christian faith. His poems were written in *koccakak kalippā* metre. This was first printed by Appāvu Piḷḷai, on which A. Muttucuvāmi Piḷḷai wrote a commentary. Rhenius has written a few hymns in Tamil but he followed the western metrical pattern. Another important European Tamil poet, Philip Fabricius (1742-1791) has enriched the Christian hymnody with his creative ability and beautiful images. His lyrics are highly esteemed by the Tamil Christian congregation. Apart from the multifarious short hymns, Robert Caldwell (1814-1891) has composed a book of beautiful hymns under the title **Naṟkaruṇai Tiyāṉamālai.** The short lyrics composed by Robert Caldwell are found in Rev. E. Webb's **Christian Lyrics for Public and Social Worship.**

## **Joseph C. Beschi** (1680-1747)

The greatest among the European Tamil poets is the Catholic missionary Beschi, who called himself Vīramāmuṉivar. Among his poetical compositions, **Tēmpāvaṇi, Tirukkāvalūr Kalampakam, Aṭaikkala Mālai, Aṉṉai Aḻuṅkal Antāti** and **kittēriyammāḷ Ammāṉai** are worth-mentioning. The first of these is a long narrative poem modelled on the Indian epic pattern, whereas the other poems conform to the rigid neoclassical *pirapantam* forms.

Writing about Beschi's poems, Caldwell says, "The post of honour . . . is to be assigned to two contemporary poets, one of native, the other a foreigner. The second of these whose poems occupy still a high place in literature was the celebrated Beschi, not a Tamilian, like every other Tamil poet (Vētanāyakam Cāstriyār). but an Italian . . . who acquired such a mastery over Tamil especially over its classical dialect and no other European seems ever to have acquired over that of any other Indian language " (1982:38,239).

It is obvious that Beschi has drunk deep in the fountains of Tamil classics; he has assimilated the thoughts, descriptions and narrative teachniques of Tamil epics such as **Cilappatikāram, Cīvakacintāmaṇi** and **Kamparāmāyaṇam.** He was also greatly influenced by the Tamil ethical works like **Tirukkuṟaḷ** and **Nālativār.** He has

blended the lofty Tamil ethical codes with the ideals of Christianity. Apart from these native formative influences, Xavier S. Thaṉināyakam traces the impact of Dante, Virgil and Tasso in **Tēmpāvaṇi** and concludes that Beschi's epic is a lake where the streams of Eastern and Western literary traditions meet and mingle happily.

## Responses from Native Poets

No European missionary had been interested in spreading the secular literature of the West among the Tamils during the initital phase of their contact with Tamil land. The sole aim of the missionaries was to expand kingdoms of their Saviour and so they made painstaking efforts to introduce the Gospel, the message of the **Bible,** the dogmas and the doctrines of Christianity to the Tamils by nativizing them. Consequently, no one was interested in teaching either the plays of Shakespeare or the poems of the Western Romantic poets. It is obvious that neither Shakespeare nor the Romantic poets have shown much interest in Christianity as a religion. So it is probable that their works were not very enthusiastically received by the orthodox Christian missionaries. Regarding the English Romantic poets, many of them were anti-Christians and so the missionaries might have considered it a heresy to teach the works of the Romantics which in some way or other eulogize the pagan belief. So the missionaries with their puritanical approach to religion have not shown keen interest in the secular literature of their lands. As a result, the impact of Western secular literature on Tamil culture was very little pronounced in the earlier phase. It was only after the introduction of the Western type of education in a later period that the Tamils were able to know much about the secular Western literatures.

Yet, the Western hymns which were translated and sung in the liturgies of the Tamil churches could not attract the Tamils due largely to their sickly translation, unfamiliar images and rhymes. They could not cater to the aesthetic needs of the newly converted Christians who were nurtured in the soul-stirring lyrics of the Āḻavārs and the Nāyaṉmārs. As a result, the newly converted native Christian poets came into the literary arena and beautiful poems blending Eastern form and Western content began to dominate the Tamil literary scene.

## Native Christian Poets before Cāstiriyār

As mentioned earlier, the earliest kind of Tamil poetry that emerged out of the cultural fusion of the East and the West is the Tamil Christian poetry. Efforts in this direction were initiated by the Western scholars who translated into Tamil the Western hymns and lyrics. Following them, indigenous Tamil poets, who were the converts, started composing poems imbibing Christian faith and doctrines. Most of the poems written by the native Christian poets in the initial phase seem to be pale imitations of the neo -classical *pirapantam* models with Christian content. Yet, the later Christian

poets are not very rigid in following the neo-classical tradition. They have handled the neo-classical forms creatively with appropriate modifications. The first significant native Christian poet in this new discipline is Vētanāyakam Cāstiriyār (1774-1864).

Before Vētanāyakam Cāstiriyār, there were only a few native Christian poets who took to composing Christian devotional poems in the native metres and literary forms. The oldest Tamil Catholic poem thus came is said to be **Caṉṭiyōku Mēyar Ammāṉai** composed in 1647 in Ceylon by a Brahmin convert, the learned Pedro (D. Rājarigam, 1958: 20). This poem celebrates the famous shrine of St. James the Great at Kilali , Ceylon. This book is said to have been in manuscript until 1894 when it was printed. In the Portuguese period another poetical treatise conforming strictly to the *paḷḷu* form named **Ñāṉappaḷḷu** (sacred song) came to be published. The date of composition of this book might have been around 1644-1650. The name of its author is not known. "This work is considered by the Tamil Catholics the earliest specimen of Tamil Catholic dramatic poety" (*Ibid*) .

Before Vētanāyakam Cāstiriyār came to the Tamil Christian literary scene, Fr. Jarome Gonsalves, a Koṅkaṇi Brahmin of Goa had written a number of Tamil Catholic poems and prose works. Some of his important works are: 1. **Kirustiyāṉi Ālayam**, 2. **Tēvar Aruḷvēta Purāṇam** (1725), 3. **Cattiya Vētātaṉa Cañcīpam**, 4. **Cuvicēcaka Viritturai**, 5. **Viyākulap Piracaṅkam** (1730), 6. **Ñāṉa Uṇarcci** (1739) and 7. **Cukīrtta Tarppaṇam.** During this time Johann Arndt's heart-melting devotional hymns were translated into Tamil by Benjamin Schultz and this book had exercised a deep influence on the Tamil Christian classics of the native Christian poets.

## Vētanāyakam Cāstiriyār

Vētanāyakam Cāstiriyār is said to be the harbinger of the resurrection of Tamil Christian literature. "A literary resurrection such as his suggests a parallel to the 20th century revival of Kierkegaard" (*Ibid.*) Vētanāyakam Cāstiriyār was the eldest son of Tēvacakāyam, a Dominican catechist, and Ñāṉappū. From his childhood, he was brought up by Christian Frederic Schwartz, a Lutheran missionary at Tañcāvūr along with Sarfoji, the Prince of Tañcāvūr. From the year 1786 to 1792, he studied Christian theology under the guidance of Rev. Schwartz and Dr. John at Tañcāvūr and Tranquebar respectively. In 1794, he was appointed as Headmaster in a primary school at Tañcāvūr and he served in that capacity for a few years. The early demise of his wife in 1796 whom he married in 1795, the sudden death of his devoted guru, Rev. Schwartz in 1798 and the unfortunate death of his father in 1799, threw him out of balance and the deep-seated dejection and mental agony caused by these pathetic events find powerful expression in his devotional lyric **Jepamālai.**

During his ninety years of life, this illustrious Protestant Christian poet had written more than 120 books both in verse and prose. From one of his works entitled **Taruma Nūl Teḷivu** we learn that he had composed nearly one hundred poetical works between the years 1790-1854. His famous dramatic poetry **Pettalakēṉ Kuṟavañci** was published in 1800. The Tañcāvūr Church honoured him in 1808 with the title *Vētacirōmaṇi Makāñāṉa Kaviccakkaravartti.* Again the title *Cuvicēṭakak Kavirāyar* was conferred on him in the same year when he recited **Ñāṉanoṇṭi Nāṭakam** before the congregation of the Tranquebar Church. In 1809 he was invited by the Vēppēri Church (Chennai) and presented with a costly palanquin for rhapsodizing his melodious devotional lyrics in the presence of Rev. Peazold. In the same year, he composed the poem **Ceṉṉaippaṭṭiṉap Piravēcam** or **Paṭṭiṉa Noṇṭi** under the pseudonym Vāmaṉ who is the narrator of this new kind of poetry. His **Pēriṉpak Kātal** (Divine Love) and **Cāstirak Kummi** were written in 1813 and 1814 respectively. In 1815, he was honoured by Rev. Christian Phole with the title *Vēta Cāstiriyār.*

## Western Impact on Cāstiriyār

Though born on the Tamil soil and nurtured by the Tamil grammatical and literary traditions Vētanāyakam Cāstiriyār was highly influenced by the Western thoughts, and in him, we see an artistic blending of Western content and Tamil literary forms. His theological pursuits under Dr. John of Tranquebar and Rev. Schwartz were greatly responsible for such a deep impact of Western thought on him. The Western hymnody, the religious poems of Christian mystics like John Bunyan and epic poets like Milton might have exerted a deep influence on him since there are numerous internal evidences for such an impact on his poems. Besides, he lived in a period when the Romantic movement was in full swing in the European literatures. Although there are no external and direct evidences to say that he came into close contact with the literary works of the European Romantic poets, a close reading of his works reveals that most of his literary theories are akin to the literary theories expounded and propagated by the great Romantics of Europe, especially the English Romantics. In the rejection of rigid grammatical rules and forms, acceptance of organic form and simple language of the common man as the medium of poetry, in accepting the Romantic theory regarding the genesis of poetry and in his quest for lyrical expression, he resembles very closely the English Romantic poets. Yet he is not completely against conventional literary forms, nor is he a blind follower of tradition. His individuality and success lie in handling the traditional materials and forms in a creative manner.

## After Cāstiriyār

There is a tendency among the native Christian poets to preserve their own native literary forms although they did not hesitate to fill them with Christian content. This reveals that though they were prepared to accept the religious doctrines and dogmas of Christianity, they were not prepared to uncreatively subscribe to the Western tradition. They took painstaking efforts to keep the uniqueness and individuality of their indigenous literary tradition. So without surrendering themselves completely to the impact of Christianity, they sought a kind of reconciliation between the East and the West. This is obvious from their attempt to synthesize the Eastern literary forms and Western religious content and also from their nativization of Christan thoughts.

Another native Christian poet who composed luminous volumes of poems under Western influence is Vētanāyakam Piḷḷai (1826-1889) popularly known as Māyūram Vētanāyakam Piḷḷai. He is one of the chief protagonists of the Tamil Renaissance witnessed under the impact resulting from by the study of Western classics and the revival of traditional native works. Vētanāyakam Piḷḷai's role in the Tamil Renaissance is significant in so far as he introduced the Western literary form, novel, into Tamil. His prose fiction **Piratāpa Mutaliyār Carittiram** and **Cukuṇa Cuntari** mark a turning point in the history of Tamil literature. In the introduction to his first novel, the author says that since he has a taste for idealization, he has built the story in an ideal way.

Although he is known as the first Tamil novelist his name is glorified in the Tamil Christian world as a famous Catholic poet. His was not a fanatic religious outlook but egalitarian and humanitarian and he viewed all religions as diverse ways to reach the same divinity. This may be due to the impact of the religious renaissance, the revival of the old religious doctrines by the revivalists like Vivekananda, and his friendship with various Hindu scholars such as Makāvittuvāṉ Mīṉāṭcicuntaram Piḷḷai and others who have emphasized a cosmopolitan outlook in religious faiths.

## H.A. Kiruṣṇa Piḷḷai (1827-1900)

He was born at Karaiyiruppu, a small village in the Tirunelvēli District. He was appointed in 1853 in a school at Cāyarpuram run by the Society for the Propagation of the Gospel. He was an orthodox Hindu by birth and was later converted to Christianity. He got baptism in April 1858 in the S.P.G. Church at Mylapore and was given the Christian name Henry Alfred. He edited **Tiṉavarttamāṉi**, a Tamil journal,

with Dr. Precival. He also worked at C.M. College, Tirunelvēli and Maharajah's College, Trivandrum. He had had acquaintance with P. Cuntaram Piḷḷai, the author of the Tamil verse drama **Maṉōṉmaṇiyam.**

The first Tamil version of John Bunyan's **The Pilgrim's Progress** under the title **Mōṭcappirayāṇam** came to be published in 1793 by the S.P.C.K. Society. Since it received considerable appreciation from the Tamil Christians, a number of Tamil versions appeared subsequently. Among the Tamil versions of **The Pilgrim's Progress,** the Tamil rendering by Samuel Paul (1844-1900) which came in 1882, evoked very good response among the native Christian congregation. It stirred the mind of Kiruṣṇa Piḷḷai and inspired him to compose a Tamil poem. A.J. Appācami says (1960: 41):

> It was Krishna Pillai's long cherished ambition to write a Tamil Christian classic which the world would not willingly let die. He was fortunately able to devote himself to this great task for a period of fourteen years towards the end of his life. His extensive study of the Tamil classics, his rare gifts and his mature Christian experience enabled him to write the great book **Iraṭcaṇiya Yāttirikam.** We are told that the poet himself said once 'I have poured my life into that book. My heart's deepest is in it'.

The work consists of five *paruvams* namely *Āti Paruvam, Kumāra Paruvam, Nitāṉa Paruvam, Āraṇiya Paruvam* and *Iraṭcaṇiya Paruvam.* It narrates the spiritual Christian journey of its central figure who reaches the celestial city after crossing many places and events of adversities and prosperities. This quest motif is powerfully presented in this epic along with some flashback narration of the Biblical events such as the crucifixion of Christ. His verses are deeply influenced by the moving poems of Kampaṉ and those of the Tamil devotional movements.

Although Kiruṣṇa Piḷḷai was inspired by the allegorical narration of Bunyan, he did not blindly imitate it. He made considerable changes in the story to suit the cultural background and the aesthetic sensibilities of his Tamil Christian readers. Although the story takes its origin from the West, the structure of Kiruṣṇa Piḷḷai's poem is influenced by that of the Tamil epic **Kamparāmāyaṇam.** As a result, a synthesis of the Western and Eastern traditions is artistically achieved in this work, which blends the Western poetic content and the Tamil epic structure. Whereas the original work is in prose, Kiruṣṇa Piḷḷai's work is in verse. Kiruṣṇa Piḷḷai's book contains episodes that are not in the original. He has omitted the characters that are in the original and added new ones. In the second book entitled, *Kumāra Paruvam,* there is a whole chapter of about five hundred verses on the life of Jesus Christ narrated in a string of magnificent stanzas. This is completely absent in the English original.

Kiruṣṇa Piḷḷai was attracted by the work of Bunyan because the whole story of the Christian and his march to the promised land overcoming several weaknesses and much travail and obstruction, caused by doubt, despondency and worldly attachments reminded him of his own life and mental struggle (A. V. Subramania Aiyar, 1970 : 76). The chief merit of Kiruṣṇa Piḷḷai's work is its poetry characterized by a simple but excellent diction. Hence he has been called the Christian Kampaṉ.

Miss Army Carmichael, his student, is right when she describes his passion for Christ as expressed in his works thus: "Thought on thought and word on word came running up, eager to tell what cannot be told- of the light like the light of the morning when the sun rises, of the fairness like the fairness of the green tender grass springing out of the earth by clear shining after rain, of the sky full of stars which all were suns that had suddenly opened above him. And he longed power to express to his people the beauty and dearness of Christ Jesus, his redeemer, by whose stripes he was healed".

**G. John Samuel**

# முன்னுரை

**கிருஸ்தவத் தமிழ்க் கவிதைகளின் தோற்றம்**

பிற்காலத் தமிழ் இலக்கியத்தில் தோன்றிய இறைநெறிப் பாடல்களின் மறுமலர்ச்சிக்கு ஐரோப்பியத் தமிழறிஞர்கள் பல நிலைகளிலும் வித்திட்டுச் சென்றுள்ளனர். தமிழியல் தொடர்பான பல்வேறு துறைகளில் வியக்கத்தகுந்த வகையில் தொண்டாற்றிய ஐரேப்பியக் கிருஸ்தவ இறைநெறித் தொண்டர்கள் தமிழில் தொடக்க நிலையில் பல கிருஸ்தவ இறைநெறிப் பாடல்களைப் பாடிச் சென்றனர் இவர்களின் தொடக்க முயற்சிகள், தமிழ் நாட்டின் வேறு சமயத்தைச் சார்ந்த மக்களிடமும் இறைநெறிப் பாடல்களைப் படைப்பதில் புதிய ஆர்வத்தை எழுப்பின. சமயப் போராட்டம் எழுச்சி பெற்ற இக்காலக் கட்டத்தில் ஐரோப்பிய இறைநெறித் தொண்டர்கள் கிருஸ்தவ சமயக் கவிதைகள் படைப்பதில் காட்டிய ஆர்வம், தமிழ் இறைநெறிப் பாடல்களின் வரலாற்றில் ஒரு பெரிய மறுமலர்ச்சியினைத் தோற்றுவித்தது எனலாம். இதன் விளைவாகத் தமிழிலக்கிய வரலாற்றின் இடைக்காலத்தைப் போன்று எண்ணற்ற இறைநெறிப் பாடல்கள் பல்வேறு சமயத்தினராலும் தோற்றுவிக்கப்பட்டன.

இறைநெறிப் பாடல்களைப் பொறுத்தவரையில் ஐரோப்பியக் கிருஸ்தவத் தொண்டர்களின் பங்கு மிகப்பெரிய அளவில், வியக்கத்தக்க முறையில் அமைந்துள்ளது என்று கூறமுடியாது அவர்கள் படைத்துச் சென்ற பாடல்களை உயர்ந்த இலக்கியத்தரம் வாய்ந்த பாடல்கள் என்றும் கருதமுடியவில்லை எனினும், வரலாற்று நிலையில் நோக்கும்போது இவர்களின் தொண்டு குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெறுகின்றது. ஏனெனில், தமிழ் நாட்டுப் பின்புலன்களையும் பண்பாட்டுக் கூறுகளையும் தாங்கித் தமிழ்க் கிருஸ்தவப் பாடல்கள் என்ற ஒரு புதுவகையான இலக்கியம் தமிழில் தோற்றம் பெறுவதற்கு மேற்கூறிய ஐரோப்பியக் கிருஸ்தவத் தொண்டர்களின் முயற்சிகள் அடிப்படையாக அமைந்தன.

ஐரோப்பியத் தமிழ்க் கிருஸ்தவக் கவிஞர்களில் இராபர்ட் டி நொபிலி (Robert de Nobili), பெஸ்கி (Beschi) , சீகன்பால்க் (Ziegenbalg), எல்லிஸ் (Ellis),

ரேனியஸ் (Rhenius), டாக்டர் ஜி யு. போப் (Dr. G.U. Pope), டாக்டர் கால்டுவெல் (Dr. Robert Caldwell) என்போர் குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெறுகின்றனர். இவர்களுள், **நமது கடவுளின் துயரங்கள்** ( On the Suffering of our Lord) **உண்மையான சமயம்** (Apology of the True Religion), **நித்திய வாழ்வு** (Eternal Life) என்ற மூன்று கவிதைகளை இராபர்ட் டி நொபிலி (1577-1656) எழுதியதாகக் கூறப்படுகின்றது. இவற்றைத் தவிர அவர் தமிழில் எழுதிய பல கவிதைகள் மறைந்துவிட்டதாகவும் கிருஸ்தவ இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர் அவரது படைப்புக்களைப் பற்றிக் குறிப்பிடும் கோவர் (Charles E. Gover) என்பவர், பல ஆண்டுகளுக்கு முன்னர் இராபர்ட் டி நொபிலி தமிழில் எழுதிய இறைநெறிப்பாடல்கள் மக்கள் மத்தியில் பாராட்டுதலையும் மதிப்பையும் பெற்றிருந்தன என்று குறிப்பிடுகின்றார். இதனால் தமிழ்க் கிருஸ்தவ இறைநெறிக் கவிஞர்களுக்கு இராபர்ட் டி நொபிலி வழிகாட்டியாக அமைந்தார் என்பதை அறிய முடிகின்றது.

ஐரோப்பியத் திருச்சபைகளில் வழிபாட்டின் போது பாடப்பட்ட ஜெர்மானியக் கிருஸ்தவக் கவிதைகளைத் தமிழில் மொழிபெயர்ப்பதற்கு சீகன்பால்க் (1682-1714) என்னும் கிருஸ்தவ இறைத்தொண்டர் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் இங்குக் குறிப்பிடத்தக்கன 1713ஆம் ஆண்டில் **மலபார் இசையினைத் தழுவிய கிருஸ்தவப் பாடல்கள்** (The Book of Hymns Set to Malabaric Music) என்ற நூலை வெயிட்டு இசையோடு இணைந்த கிருஸ்தவத் தமிழ் இலக்கியங்கள் தோன்றுவதற்கு அவர் அடித்தளத்தினை அமைத்துக் கொடுத்துள்ளார் ஐரோப்பியப் பண்பாட்டில் நீராடிய கிருஸ்தவக் கோட்பாடுகள் தமிழ்ப் பண்பாட்டிலும் நீராட, இப்படைப்பில் புதிய கலைவடிவத்தைப் பெற்றுள்ளன. சீகன்பால்க் எழுதிய மேற்கூறிய இசைப் பாடல் நூல் தமிழில் அச்சிடப் பெற்ற முதல் இசைப் பாடல் நூலாகக் காட்சி தருகின்றது.

தமிழ் நாட்டுக் கிருஸ்தவத் திருச்சபைகளில், தமிழில் பாடல்கள் பாடுவதை முதன் முதலாக அறிமுகப்படுத்திய இறைத் தொண்டராகத் தத்துவ போதகர் என்னும் சீகன்பால்க் குறிப்பிடப்படுகின்றார். 1713இல் அவர் தமிழில் வெளியிட்ட 48 பாடல்களின் மொழிபெயர்ப்புத் தொகுதி, அவருக்குப் பின் வந்தோரால் 307 பாடல்களைக் கொண்ட தொகுதியாக விரிவு பெற்றது. அவர் விட்டுச் சென்ற பணியினை அவருக்குப் பின்னர் வந்த கல்ட்ஸ் (Schultze), பிரஸியர்(Pressier), வாக்கர் ( Walker) போன்றோர்கள் தொடர்ந்து மேற்கொண்டு தமிழ்க் கிருஸ்தவ இலக்கியப் பரப்பினை மேலும் விரிவுபடுத்தினர்.

தமிழ் நாட்டைச் சார்ந்த கிருஸ்தவர்களால் வெளியிடப்பட்ட சீகன்பால்கின் மொழிபெயர்ப்புப் பாடல்கள் தமிழ் நாட்டில் சிறந்த வரவேற்பைப் பெற்றன. இதன் விளைவாக ஏனைய வெளிநாட்டு இறைத் தொண்டர்களும் தமிழில் இறைநெறிப் பாடல்களைப் படைத்தளிக்க ஆர்வம் கொண்டனர். இந்திய இசையைத் தழுவிக் கிருஸ்தவப் பாடல்கள் அமைய வேண்டும் என்று விரும்பிய அமெரிக்கத் திருச்சபையைச் சார்ந்த இறைத் தொண்டரான இ வெப்(E. webb) என்பவர் 1859 இல் **கிருஸ்தவக் கீர்த்தனைகள்** என்ற நூலைப் பதிப்பித்தார். இந்நூலைக் கிருஸ்தவ வெர்னாகுலர் கல்விச் சங்கம் (Christian Vernacular Education Society for India) என்ற நிறுவனம் வெளியிட்டுள்ளது இதனைத் தொடர்ந்து **திருச்சபைக் கீர்த்தனைகள், டோனாவூர் தமிழ்க் கீர்த்தனைகள், புகழ்மாலை** போன்ற பல நூல்கள் அச்சு வாகனம் ஏறித் தமிழ் நாட்டில் உலா வரத் தொடங்கின.

கிருஸ்தவ நம்பிக்கைகளை மையமாகக் கொண்ட சில அழகிய தமிழ்க் கவிதைகளை எல்லிஸ் எழுதி வெளியிட்டுள்ளார். இவர் கொச்சகக் கலிப்பா என்னும் யாப்பு வடிவில் தம் கவிதைகளை எழுதியுள்ளது குறிப்பிடத் தக்கது. முத்துசாமிப் பிள்ளை என்பவரின் உரையோடு கூடிய இக் கவிதைகளை அப்பாவுப் பிள்ளை என்பவர் முதன் முதலாக அச்சிட்டு வெளியிட்டுள்ளார்.

மேல்நாட்டு யாப்பு விதிகளைத் தழுவி, ரேனியஸ் என்னும் கிருஸ்தவத் தொண்டரும் பல தமிழ்க் கவிதைகளைப் படைத்துள்ளார். டாக்டர் இராபர்ட் கால்டுவெல் (1814-1891) பல உதிரிப் பாடல்களை எழுதியதோடு, **நற்கருணைத் தியானமாலை** என்ற தலைப்பில் ஒரு நூலையும் படைத்துள்ளார். இராபர்ட் கால்டுவெல் படைத்த சில தனிப்பாடல்கள் இ வெப் என்பவரால் வெளியிடப்பட்ட **கிருஸ்தவக் கீர்த்தனைகள்** என்ற நூலில் இடம் பெற்றுள்ளன. கிருஸ்தவத் தமிழ்க் கவிஞரான வேதநாயகம் சாஸ்திரியாரின் கவிதைகளையும் தமது நூலில் இ. வெப் இடம் பெறச் செய்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது

### வீரமாமுனிவர் (1680-1747)

மேல்நாட்டு இறைத் தொண்டர்களின் கவிதைப் படைப்புகளைப் பொறுத்தவரையில் வீரமாமுனிவர் என்று அழைக்கப்படும் ஜோசப் பெஸ்கியின் படைப்புக்கள் தரத்தில் உயர்ந்து காட்சி தருகின்றன. இவரைப் பற்றிக் குறிப்பிடும் டாக்டர் கால்டுவெல், "தற்காலக் கிருஸ்தவக் கவிஞருள் இருவர் குறிப்பிடத்தகுந்தவர். ஒருவர் தமிழ் நாட்டைச் சார்ந்தவர்; மற்றொருவர் வெளி நாட்டவர். இவர்களுள் வெளிநாட்டவரான பெஸ்கி, இத்தாலிய நாட்டைச்

சார்ந்தவராக இருந்த போதிலும் தமிழில் அழுத்தமான புலமை பெற்றுத் தமிழ் மொழியின் பழைய இலக்கியப் படைப்புகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டு, ஐரோப்பிய நாட்டைச் சார்ந்த இறைத் தொண்டர்கள் எவரும் சாதிக்க முடியாத சாதனையைச் சாதித்துள்ளார்” என்று கூறிச் செல்கின்றார். அவரைத் தொடர்ந்து பெப்மஸயஸ் என்பவர் அழகிய காட்சிப் படிமங்களாலும் ஆற்றல்மிக்க படைப்பாற்றலாலும் தமிழ்க் கிருஸ்தவ இலக்கியப் படைப்பாளர் வரிசையில் மிகச் சிறந்த இடத்தைப் பெறுகின்றார்.

ஐரோப்பியக் கிருஸ்தவத் தமிழ்க் கவிஞர்களைப் பொறுத்த வரையில் வீரமாமுனிவர் பெற்ற உயரிய இடத்தினை வேறு எந்த ஐரோப்பியக் கவிஞர்களாலும் பெற முடியவில்லை. வீரமாமுனிவர் படைத்த கிருஸ்தவத் தமிழ் இலக்கியங்களுள் **தேம்பாவணி, திருக்காவலூர்க் கலம்பகம், அடைக்கல மாலை, அன்னை அழுங்கல் அந்தாதி, கித்தேரி அம்மாள் அம்மானை** ஆகியன குறிப்பிடத்தகுந்தன. இவற்றுள் முதலில் இடம் பெறும் **தேம்பாவணி** இந்தியக் காப்பிய நெறிகளைப் பின்பற்றியமைந்த தமிழ்க் காப்பியமாகவும் ஏனைய இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள் என்று அழைக்கப்படும் பிரபந்த வகைகளைத் தழுவியனவாகவும் காட்சி தருகின்றன.

தமிழ் இலக்கியச் செல்வங்களை ஆழமாகக் கற்றுத் துறை போகிய அறிஞராக வீரமாமுனிவர் காட்சி தருகின்றார். **சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம்** ஆகிய காப்பியங்களில் இடம் பெற்றுள்ள உயரிய சிந்தனைகள் வர்ணனைகள், உத்திகள் ஆகியவற்றைத் **தேம்பாவணிக்** காப்பியத்தில் அவர் பின்பற்றுவதைக் காண்கின்றோம். அதோடு, நீதி நூற்களான **திருக்குறள், நாலடியார்** போன்ற படைப்புகளும் வீரமாமுனிவரின் மீது பெரும் பாதிப்பினை ஏற்படுத்தியுள்ளன. கிருஸ்தவத்தின் உயரிய சிந்தனைகளைத் தமிழர்களின் அறவியல் சிந்தனைகளோடு இணைத்துத் **தேம்பாவணிக்** காப்பியத்தில், பல இடங்களிலும் அவர் இடம் பெறச் செய்துள்ளார். இதைத் தவிர மேல் நாட்டுக் கவிஞர்களான தாந்தே, வர்ஜில், தாஸோ என்போரின் பாதிப்புக்களும் **தேம்பாவணியில்** இருப்பதாக டாக்டர் சேவியர் தனிநாயகம் அவர்கள் குறிப்பிட்டுச் செல்கின்றார். கீழைத் தேசத்துக் கலைகளும் மேலை நாட்டு இலக்கிய மரபுகளும் இணைந்து சங்கமமாகும் ஒரு பெரிய ஏரியாகத் தனிநாயகம் அவர்கள் **தேம்பாவணியைப்** பாராட்டுகின்றார்.

## கிருஸ்தவக் கவிதையும் தமிழ் நாட்டுப் புலவர்களும்

தமிழ் நாட்டில் கிருஸ்தவ சமயப் பிரச்சாரத்திற்காக வந்த மேல்நாட்டுக் கிருஸ்தவத் தொண்டர்கள் சமய இலக்கியங்களைப் பரப்புவதில் ஆர்வம் காட்டினரே தவிர, சமயச் சார்பு இல்லாத எந்த மேல்நாட்டு இலக்கியங்களைப் பரப்புவதிலும் ஈடுபாடு கொள்ளவில்லை கிருஸ்துவின் சாம்ராஜ்யத்தின்

பரப்பினை விரிவு படுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்ட அவர்கள் கிருஸ்தவத் திருமறை, நற்செய்தி நூற்கள், கிருஸ்தவக் கோட்பாடுகள், நம்பிக்கைகள் ஆகியவற்றைத் தமிழ்ப்படுத்துவதிலும் தமிழ் நாட்டுச் சூழல்களுக்கேற்பத் தமிழில் தருவதிலும் அதிக ஆர்வம் காட்டினர். எனவே நாடக மேதையான ஷேக்ஸ்பியரின் நாடகங்களை அறிமுகப்படுத்துவதிலோ, வீறுணர்ச்சிக் கவிஞர்களின் கவிதைகளைத் தமிழர்களுக்குத் தருவதிலோ அவர்கள் ஆர்வம் காட்டவில்லை ஷேக்ஸ்பியரோ, வீறுணர்ச்சிக் கவிஞர்களோ கிருஸ்தவ சமயப் பிரச்சாரத்தில் ஆர்வம் கொள்ளவில்லை என்பது தெளிவு. ஆங்கில வீறுணர்ச்சிக் கவிஞர்களைப் பொறுத்தவரையில் பெரும்பாலான கவிஞர்கள் கிருஸ்தவத்திற்கு எதிரிகளாகவே திகழ்ந்தனர். எனவே இப்படைப்புக்களைத் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்துவது கிருஸ்தவத்திற்கு எதிரிடையான எண்ணங்களை வளர்க்கத் துணைபுரியும் என்று மேல்நாட்டு இறைத் தொண்டர்கள் கருதியிருக்கலாம். எனவே, சமயப் பிரச்சாரம் ஆதிக்கம் பெற்றிருந்த இக்காலக் கட்டத்தில், சமயச் சார்பற்ற மேல்நாட்டு இலக்கியங்கள் தமிழில் அதிக பாதிப்பை ஏற்படுத்த வாய்ப்பில்லாமல் போய்விட்டது. மேல் நாட்டு முறையில் அமைந்த கல்வி அமைப்பு, தமிழ் நாட்டில் அறிமுகப் படுத்தப்பட்ட காலம் தொடங்கியே சமயச்சார்பற்ற மேலை நாட்டு இலக்கியங்கள் தமிழ் இலக்கியத்தில் பெரும் பாதிப்புகளை ஏற்படுத்தத் தொடங்கின எனலாம்.

மேல்நாட்டுப் படைப்புக்களின் தமிழ் மொழிபெயர்ப்புகள் சிறப்பாக அமையாததாலும் அப்பாடல்களில் அமைந்துள்ள காட்சிப்படிமங்கள் தமிழ் நாட்டுச் சூழ்நிலைகளுக்கு இயைந்து வராமல் அமைந்ததாலும் அவற்றின் ஓசை நயம் தமிழர்களுக்குப் பழக்கப்பட்டதாக அமையாததாலும் அவை தமிழ் மக்களை விரைவில் கவர்ந்து, அவர்தம் வாழ்வியலோடு முழு நிலையில் ஒன்றிவிடத் தவறிவிட்டன. ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடிய, உள்ளத்தை உருக்கும் பக்திப் பாடல்களின் சொல்லழகிலும், இசைச்சிறப்பிலும், ஆன்மீகத் தேட்டத்திலும் உள்ளத்தைப் பறிகொடுத்துப் பின்னர் கிருஸ்தவர்களாக மாறிய தமிழ் மக்களின் கலையுணர்வுமிக்க உள்ள வேட்கைகளுக்குப் போதுமான உணவாக மேற்கூறிய மேல்நாட்டுப் பக்திப் பாடல்களின் மொழிபெயர்ப்புகள் அமையவில்லை. அதன் விளைவாக, கிருஸ்தவ சமயத்தைத் தழுவிய தமிழ்க் கவிஞர்கள் சிலர், மேல்நாட்டுச் சமயக் கோட்பாடுகளைத் தன்வயப்படுத்திக் கொண்டு, தமிழ்க்கவிதை வடிவில் எண்ணற்ற கிருஸ்தவத் தமிழ்க் கீர்த்தனைகளைப் படைத்தளிக்க முன்வந்தனர். அதன் விளைவாக உண்மையான தமிழ்க் கிருஸ்தவ இலக்கியங்கள் தமிழ் நாட்டில் பிறப்பெடுக்கத் தொடங்கின.

மேற்கூறிய சமுதாய, இலக்கியப் பின்புலத்தில் ஏராளமான தமிழ்க் கிருஸ்தவக் கவிஞர்கள், இலக்கியப் பயணத்தினைச் சிறப்புடன் தமிழ் நாட்டில்

மேற்கொள்ளத் தொடங்கினர். அவர்தம் கவிதைகளில் மேல்நாட்டு இலக்கிய உள்ளீடும், தமிழ் நாட்டு இலக்கிய வடிவமும் ஒன்றோடு ஒன்று இணைந்து பின்னிப் பிணைந்து கலை வடிவத்தினைப் பெறத் தொடங்கின.

முன்னர் குறிப்பிட்டது போன்று கிழக்கும் மேற்கும் சங்கமமானதன் விளைவாகத் தோன்றிய, முதல் புதுமை இலக்கியமாகத் தமிழ்க் கிருஸ்தவக் கவிதைகளைக் குறிப்பிடலாம். இது போன்ற புதிய முயற்சிகளுக்கு வித்திட்டவர்களாக மேல்நாட்டு இறைத் தொண்டர்கள் காட்சி தருகின்றனர். மேலை நாட்டுப் பக்திப் பனுவல்களையும், பக்திச்சுவை பொங்கித் ததும்பும் தன்னுணர்ச்சிப் பாடல்களையும் தமிழ் மொழியில் மொழிபெயர்த்துத் தந்தும் தமிழில் கிருஸ்தவப் பாடல்களை இயற்றியும் இத் தொண்டர்கள் மேற்கூறிய இலக்கிய வளர்ச்சிக்கு வழி காட்டினர் இம்முயற்சி தமிழ் நாட்டுக் கிருஸ்தவத் தொண்டர்களைத் தூண்டவே, கிருஸ்தவக் கோட்பாடுகளும் இறையியல் தத்துவங்களும் தமிழ்க் கவிதைகளாக உருப்பெறத் தொடங்கின. இவ்வியக்கத்தைச் சார்ந்த தொடக்க நிலைக் கவிஞர்களின் கவிதைகள் மிகச் சிறப்பு வாய்ந்தன என்று குறிப்பிட முடியவில்லை தமிழ் நாட்டுப் புதுச் செந்நெறி இலக்கிய வடிவங்களான பிரபந்த வடிவங்களில் அவை கிருஸ்தவச் சிந்தனைகளைத் தந்து நின்றன. ஓரளவிற்கு ஏதோ ஒன்றைப் பார்த்து அப்படியே படைப்பதைப்போன்ற செயற்கைத்தன்மை அவற்றில் மலிந்து கிடப்பதைக் காணலாம். எனினும் அவர்களைத் தொடர்ந்து தோன்றிய கவிஞர்கள் பிரபந்த வடிவங்களைச் சற்றும் மாறுபடாமல் அப்படியே கையாள்வதில் அதிக ஆர்வம் காட்டவில்லை பிரபந்த வடிவங்களைப் படைப்பு உள்ளத்துடனும் திறனாய்வு நோக்குடனும் பரிசீலனை செய்து, தேவையான மாற்றங்களுடன் அவர்கள் கையாளத் தொடங்கினர் இத்தகைய தமிழ்க் கிருஸ்தவப் புலவர்களின் வரிசையில் நம்மை எளிதாகக் கவர்ந்திழுப்பவராக வேதநாயகம் சாஸ்திரியார் (1774-1864) காட்சி தருகின்றார்.

### சாஸ்திரியாருக்கு முற்பட்டத் தமிழ்க் கிருஸ்தவக் கவிஞர்கள்

வேதநாயகம் சாஸ்திரியார் கிருஸ்தவத் தமிழ் இலக்கியங்களைப் படைப்பதற்கு முன்னர் அம் முயற்சியில் பல தமிழ்க் கவிஞர்கள் ஈடுபட்டு வழிகாட்டியுள்ளனர் என்பது மறுக்க முடியாத உண்மை. அம்முயற்சியில் முதன் முதலாகத் தோன்றிய கிருஸ்தவ இலக்கியமாக **சண்டியோகு மேயர் அம்மானை** என்ற தமிழ்க் கத்தோலிக்க நூல் காட்சி தருகின்றது இந்நூல் 1647இல் எழுதப்பட்டதாகத் தெரிகின்றது. இலங்கையில் வாழ்ந்த பிராமண குலத்தைச் சார்ந்த ஒருவர் இதனை எழுதினார் என்று அறிகின்றோம். கிருஸ்தவ சமயத்திற்கு மதம் மாறிய இவ்வறிஞர் தன்னுடைய பெயரைப் பெட்ரோ என்று மாற்றி அமைத்துக் கொண்டதாகத் தெரிகின்றது. இலங்கையிலுள்ள தூய

ஜேம்ஸ் (St. James) ஆலயத்தைச் சிறப்பிப்பதாக இப்படைப்பு அமைந்துள்ளது. 1894ஆம் ஆண்டு வரை சுவடியாக இருந்து, பின்னர் இந்நூல் அச்சிடப்பட்டதாக அறிகின்றோம்.

போர்த்துக்கீசியர்களின் ஆதிக்கம் உயர்ச்சி பெற்றிருந்த காலத்தில் **ஞானப்பள்ளு** என்று ஒரு நூல் வெளிவந்ததாகத் தெரிகின்றது. பிரபந்த வகைகளுள் ஒன்றான பள்ளு என்னும் இலக்கிய வடிவைப் பின்பற்றிக் கிருஸ்தவச் செய்திகளைத் தமிழில் இந்நூல் தந்து நிற்கின்றது 1644 முதல் 1650க்கு உட்பட்ட காலத்தில் இந்நூல் படைக்கப்பட்டிருக்கலாம் என்று தெரிகின்றது. இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. தொடக்க நிலையில் தோன்றிய தமிழ்க் கத்தோலிக்க நாடகக் கவிதையாக இந்நூலைத் தமிழ்க் கத்தோலிக்கர்கள் குறிப்பிடுகின்றனர்.

தமிழ்க் கிருஸ்தவ இலக்கிய உலகில் வேதநாயகம் சாஸ்திரியார் சாதனைகள் பல புரிவதற்கு முன்னர் கோவாவைச் சார்ந்த கொங்கணிப் பிராமணரான அருட் தந்தை ஜேரோன் கொன்சல்வேஸ் (Fr. Jarone Gonsalves) என்பவர் கவிதை நடையிலும் உரைநடையிலும் பல கத்தோலிக்கத் தமிழ்க் கிருஸ்தவ இலக்கியங்களைப் படைத்துள்ளார். அவரது படைப்புகளில்:

**1. கிருஸ்தியானி ஆலயம், 2. தேவர் அருள் வேத புராணம் (1725), 3. சத்திய வேதாதன சஞ்சீபம், 4. சுவிசேசக விரித்துரை, 5. வியாகுலப் பிரசங்கம் (1730), 6. ஞான உணர்ச்சி (1739), 7. சுகீர்த்த தர்ப்பணம்** என்பன குறிப்பிடத்தக்கன.

இக்காலத்தில் பென்ஜமின் கல்ட்ஸ் (Benjmin Schultz) என்பவர் ஜோகன் (Johann Arndt) என்பவரின் உள்ளத்தை நெகிழ வைக்கும் பக்திப் பாடல்களைத் தமிழில் மொழிபெயர்த்து நூலாக வெளியிட்டார் இப்படைப்புப் புதிதாகத் தமிழ்க் கிருஸ்தவக் கவிதைகள் புனையத் தொடங்கிய தமிழ் நாட்டுக் கவிஞர்களின் படைப்பாற்றலில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தத் தொடங்கியது.

### வேதநாயகம் சாஸ்திரியார்

தமிழ்க் கிருஸ்தவ இலக்கிய வரலாற்றில் ஒரு பெரிய மறுமலர்ச்சியினைத் தோற்றுவித்தக் கவிஞராகத் திறனாய்வாளர்களால் வேதநாயகம் சாஸ்திரியார் சுட்டப்படுகின்றார் இவர் ஏற்படுத்திய இலக்கிய மறுமலர்ச்சி, கியர்கிகார்டு (Kierkegaard) என்பவரின் மீது ஏற்பட்ட 20ஆம் நூற்றாண்டைய மறுமலர்ச்சிக்கு நிகரானது என்று கிருஸ்தவத் தமிழ் இலக்கியத் திறனாய்வாளரான இராஜரீகம் சுட்டிச் செல்கின்றார். தேவசகாயம், ஞானப்பூ என்பவர்களுக்கு மகனாகத் தோன்றிய வேதநாயகம் சாஸ்திரியார் 1774ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 7ஆம் நாள் திருநெல்வேலியில் பிறந்தார். மேல்நாட்டுக் கிருஸ்தவ இறைத்

தொண்டரான ஸ்வார்ச் (Christian Frederic Schwatz) என்ற லுத்தரன் சபையைச் சார்ந்த அருட் தொண்டரின் பராமரிப்பில் இவர் வளர்ந்து வந்தார். தஞ்சை இளவரசரான சரபோஜி மன்னருடன் இணைந்து இவர் வளர்ந்து வந்தது குறிப்பிடத் தகுந்தது. 1786 முதல் 1792 வரை ஸ்வார்ச் என்னும் இறைத் தொண்டரிடமும் பின்னர் டாக்டர் ஜான் என்பவரிடமும், முறையே தஞ்சையிலும் தரங்கம்பாடியிலும் கிருஸ்தவ இறையியல் தொடர்பான கல்வியினை இவர் கற்றார். பின்னர் 1794ஆம் ஆண்டு தஞ்சையிலுள்ள ஆரம்பப் பள்ளி ஒன்றில் தலைமையாசிரியர் பணியினை ஏற்றுச் சில காலம் பணிபுரிந்தார். 1795ஆம் ஆண்டில் திருமணம் செய்துகொண்ட சாஸ்திரியார் 1796ஆம் ஆண்டில் தன் மனைவியை இழந்தார். பின்னர்த் தனது வளர்ப்புத் தந்தையான ஸ்வார்ச் பாதிரியாரை 1798ஆம் ஆண்டில் இழந்தார். இதைத் தொடர்ந்து 1799ஆம் ஆண்டில் தன் தந்தையைப் பிரிந்தார். தொடர்ச்சியாக ஏற்பட்ட மேற்கூறிய இழப்புகளும் துயரங்களும் வேதநாயகம் சாஸ்திரியாரை நிலைகுலையச் செய்தன. உள்ளத்தின் அடிமனத்தில் ஆழமாக வேர்விட்டு வளர்ந்த இத்தகைய துன்ப உணர்வுகள் அனைத்தும் **ஜெபமாலை** என்னும் பெயரைத் தாங்கிய அவரது நூலில் வேகமாகப் பீரிட்டுக் கிளம்புவதைக் காணலாம்.

தொண்ணூறு ஆண்டுகள் வரை மண்ணுலகில் வாழ்ந்த இப் பெருங் கவிஞர் செய்யுளிலும் உரைநடையிலுமாக 120க்கும் மேற்பட்ட நூல்களைத் தமிழ் இலக்கிய உலகிற்குத் தந்துள்ளார். இவர் படைத்துள்ள **தரும நூல் தெளிவு** என்னும் நூலால் 1790 முதல் 1854ஆம் ஆண்டிற்குள் 100 கவிதை நூல்களை இவர் பாடியதாக அறிகின்றோம். வேதநாயகம் சாஸ்திரியாரின் பெரும் படைப்பான **பெத்தலகேங் குறவஞ்சி** என்னும் நாடகக் கவிதை கி.பி. 1800இல் வெளியிடப்பட்டது.

20-2-1808ஆம் ஆண்டில் தஞ்சாவூர்த் திருச்சபை, வேதசிரோமணி மகாஞான கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டத்தினை நல்கி இப்பெரும் புலவருக்கு மரியாதை செய்துள்ளது. 15-3-1808ஆம் ஆண்டில் **ஞானநொண்டி நாடகம்** என்னும் அரிய படைப்பினைத் தரங்கம்பாடித் திருச்சபையின் உறுப்பினர்களின் முன்னிலையில் வேதநாயகம் சாஸ்திரியார் பாடி விளக்கம் தந்தபோது சுவிசேடகக் கவிராயர் என்னும் பட்டம் அவருக்குத் தரப்பட்டது. 1809இல் மறைத்திரு பிஸோல்டு (Rev. Peazold) என்பவரின் முன்னர்த் தான் படைத்த பக்தி நூல்களைப் பாடிப் பரவசப்படுத்தியபோது வேதநாயகம் சாஸ்திரியாருக்கு வேப்பேரித் திருச்சபையின் சார்பில் விலையுயர்ந்த பல்லக்கு ஒன்று பரிசாகத் தரப்பட்டதாக அறிகின்றோம். இதே ஆண்டில் **சென்னைப்பட்டினப் பிரவேசம் அல்லது பட்டின நொண்டி** என்ற நுலினை, வாமன் என்ற புனை

பெயரில் அவர் எழுதியதாகத் தெரிகின்றது. 1813ஆம் ஆண்டில் **பேரின்பக் காதல்** என்னும் நூலினையும் 1814ஆம் ஆண்டில் **சாஸ்திரக் கும்மி** என்ற நூலினையும் இவர் எழுதியுள்ளார். கிருஸ்டியன் போல் (Christian Phole) என்னும் பாதிரியார் 18-6-1815ஆம் ஆண்டில் வேத சாஸ்திரியார் என்னும் பட்டத்தினை நல்கி இவரைச் சிறப்பித்தது குறிப்பிடத்தக்கது.

## மேல்நாட்டுப் பாதிப்புக்கள்

தமிழ் மண்ணில் பிறந்து, தமிழ் இலக்கியங்களைக் கற்று, தமிழ் இலக்கிய மரபுகளில் சிறந்த பயிற்சி பெற்றுள்ள வேதநாயகம் சாஸ்திரியார் மீது மேல்நாட்டுச் சிந்தனைகள் பெரும் பாதிப்பினை ஏற்படுத்தியுள்ளன. அவரது படைப்புக்களில் மேல்நாட்டு இலக்கிய உள்ளீடும் தமிழ் நாட்டு இலக்கிய வடிவமும் கலைநுட்பத்துடன் இணைந்து சங்கமமாவதைக் காண்கின்றோம். தரங்கம்பாடியில் டாக்டர் ஜான் என்பவரிடமும் தஞ்சையில் சுவார்ச் பாதிரியாரிடமும் அவர் கற்ற இறையியல் கல்வி மேற்கூறிய பாதிப்பிற்கு அடித்தளமாக அமைந்தது. மேல்நாட்டுப் பக்திப்பாடல் மரபு, கிருஸ்தவ மெய்யுணர்வுவாதிகளான ஜான் பனியன் போன்றவர்களின் படைப்பு, மில்டன் போன்ற காப்பியப் புலவர்களின் இலக்கியச் சாதனைகள் ஆகியன வேதநாயகம் சாஸ்திரியாரின் படைப்புகளில் பெரும் பாதிப்பினை ஏற்படுத்தின. அவரது கவிதைகளில் மேற்கூறிய பாதிப்புக்குரிய ஏராளமான அகச் சான்றுகள் காணப்படுகின்றன.

மேலும், மேல்நாடுகளில் வீறுணர்ச்சிக் கவிதைகள் தோன்றிப் பெரும் பாதிப்பினை ஏற்படுத்திக்கொண்டிருந்த காலக்கட்டத்தில் வாழ்ந்து கொண்டிருந்தவர் சாஸ்திரியார் ஐரோப்பிய வீறுணர்ச்சிக் கவிதையோடு அவருக்கு நேரடியான தொடர்பு இருந்தது என்பதை அறிவதற்குரிய புறச்சான்றுகள் அதிகமாக இல்லை என்பது உண்மை. எனினும் அவரது படைப்புக்களை ஆழமாகப் பயிலும்போது அவர் கொண்டிருந்த இலக்கியக் கோட்பாடுகள், ஐரோப்பிய வீறுணர்ச்சிக் கவிஞர்களின் இலக்கியக் கோட்பாடுகளோடு கைகோத்து, இணைந்து நடைபயில்வதைக் காண்கின்றோம். தேவையற்ற யாப்பு விதிகளைப் புறக்கணிப்பதிலும் நெகிழ்ந்து கொடுக்காத இலக்கிய வடிவங்களைத் தவிர்ப்பதிலும், அவயவிக் கோட்பாட்டினை (Organic Theory of Art) ஏற்றுக் கொள்வதிலும் சாதாரண மக்களின் மொழியைக் கவிதைக்குரிய மொழி நடையாகப் போற்றுவதிலும் கவிதை உள்ளத்திலிருந்து தோன்றி வெளிப்படுகின்றது என்ற அகவெளியீட்டுக் கொள்கையை வற்புறுத்துவதிலும் தன்னுணர்ச்சிப் பாடல்களுக்கு அதிகச் சிறப்பளிப்பதிலும் தமிழ் நாட்டுக் கவிஞரான வேதநாயகம் சாஸ்திரியார், ஆங்கில வீறுணர்ச்சிக் கவிஞர்களை ஒத்துக் காட்சி தருகின்றார் எனினும் மரபு வடிவங்களை

முழுமையாக எதிர்த்து அவர் போராடினார் என்று கூற முடியவில்லை. அதே சமயம் மரபு இலக்கிய வடிவங்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றினார் என்றும் குறிப்பிடமுடியவில்லை. மரபுச் செய்திகளையும் மரபுக் கோட்பாடுகளையும் திறனாய்வு ரீதியில் சிந்தித்து, படைப்புக் கண்ணோட்டத்தோடு கையாள்வதில்தான் அவரது தனித் திறமையும் வெற்றியும் பளிச்சிடுகின்றன எனலாம்.

### சாஸ்திரியாருக்குப் பின்னர்த் தமிழ்க் கிருஸ்தவ இலக்கியம்

வெளிநாட்டில் தோன்றிய கிருஸ்தவ சமயச் சிந்தனைகளை மனமுவந்து கவிதையின் பாடு பொருளாக ஏற்றுக்கொண்ட தமிழ்க் கிருஸ்தவக் கவிஞர்கள் இலக்கிய வடிவத்தைப் பொறுத்த வரையில் தமிழ் இலக்கிய மரபு வடிவங்களை இயன்ற அளவிற்குப் பின்பற்ற முயல்வதைக் காண்கின்றோம். இது மேல்நாட்டுச் சமயச் சிந்தனைகளை வரவேற்றபோதிலும் வெளிநாட்டுச் சிந்தனைகளின் பாதிப்புகளுக்கு முழுநிலையில் தங்களை அடிமைப்படுத்த அவர்கள் விரும்பவில்லை என்பதை மறைமுகமாகக் காட்டி நிற்கின்றது.

வெளிநாட்டுக் கருத்துக்களை ஏற்றுக்கொண்ட போதிலும் தம் சொந்த நாட்டில் தோன்றிய இலக்கிய மரபுகளின் தனித்தன்மையினை அவர்கள் பாதுகாப்பதில் அதிக ஆர்வம் எடுத்துள்ளதைக் காண முடிகின்றது எனவே முழு நிலையில் தம்மை மேல்நாட்டுச் சிந்தனைகளுக்கு அடிமையாக்க முயலாமல், கிழக்கையும் மேற்கையும் இணைத்து, இவ்விரு நாடுகளிலும் தோன்றிய கலையுணர்வுகளைச் சங்கமிக்கச் செய்து, புதுமைகளைப் படைக்க அவர்கள் முயல்வதைக் காண்கின்றோம். கிருஸ்தவக் கோட்பாடுகளையும், திருமறைச் செய்திகளையும் அயன்மை உணர்வு தோன்றாமல், தமிழ் நாட்டுப் பின்னணிகளுக்கேற்பத் தமிழ்ப்படுத்த முயலும் முயற்சிக்கு அவர்களது மேற்கூறிய மனப்போக்குத் தெளிவான சான்றாக அமைகின்றது. இப் போக்கினைத் தமிழ்க் கிருஸ்தவ இலக்கியம் படைக்க முயன்ற தமிழ்நாட்டுக் கவிஞர்கள் அனைவரிடமும் காண முடிகின்றது.

வேதநாயகம் சாஸ்திரியாருக்கு அடுத்த நிலையில் மேலை நாட்டுச் சிந்தனைகளின் பாதிப்பைப் பெற்றுத் தமிழ்க் கவிதைகள் பல படைத்த கிருஸ்தவத் தமிழ் கவிஞர்கள் வரிசையில் மாயூரம் வேதநாயகம் பிள்ளை (1826-1889) சிறப்பிடத்தைப் பெறுகின்றார் மேலை நாட்டு இலக்கியங்களின் பாதிப்பாலும் பழைய செந்நெறி இலக்கியங்களுக்குப் புத்துயிர் தரும் புதுப்போக்காலும் முகிழ்த்து எழுந்த பிற்காலத் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சி இயக்கத்தின் முன்னோடிக் கவிஞராக வேதநாயகம் பிள்ளை அமைகின்றார். மேல்நாடுகளில் மிகச் சிறந்த செல்வாக்கைப் பெற்ற இலக்கிய வகையான நாவல்

